REGD. No. TN MS (C) 244 ❋ ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS) Phone: 812818 ❋ 4 பக்கம் விலை 30 காசு

**அடக்கம்**

அடக்கமற்ற மனிதன் வெளியிடும் பொய் வதந்திகளால் அவன் தனக்கு மட்டுமன்று தன் சமுதாயத் துக்க பெருங்கேட்டினை விளைவிக்கிறான்.

- அண்ணல் காந்தி

# அண்ணா




**தோழமை**

தோழமைதான் சமத்துவத்தின் கனி, சமதர்ம மணம். இதை காணத்தான் ஜாதி தொலைய வேண்டும் என்று பாரதியார் சொன்னார்.

- பேரறிஞர் அண்ணா

மலர்: 2 (★) சென்னை 3-10-1978 செவ்வாய் (❋) (★) (❋) (★) வெளியூர் 4-10-1978 புதன் (❋) இதழ்: 342

## முதல்வர் புரட்சித் தலைவர் நிகழ்ச்சிகள் ரத்து

சென்னை, அக். 3 முதல்வர் புரட்சித் தலைவரின் உடல் நலம் சரி இல்லாததால் அவருக்கு முழு ஓய்வு தேவை என மருத்துவர்கள் கூறியுள்ளனர்.

ஆகவே இன்றும் (3-ம் தேதி) நாளையும் (4-ம் தேதி) முதல்வர் புரட்சித் தலைவர் எந்த நிகழ்ச்சிகளிலும் கலந்துகொள்ளமாட்டார்.

## மருத்துவ மனையில் அன்புத்தம்பி: நாஞ்சிலார்-பொன்னையன் ஆறுதல்

சென்னை, அக். 3- மத்திய சென்னை நாடாளுமன்றத் தொகுதி எம்.ஜி.ஆர். மன்றச் செயலாளரும் "நீதியின் குரல்" செய்தி ஆசிரியருமான சி.வி. அன்புத்தம்பிக்கு நேற்று (திங்கட்கிழமை) இரவு 8-30 மணிக்கு திடீரென்று கடும் மாரடைப்பு ஏற்பட்டது.

ஜேப்பியார், ஆரோக்கிய தாஸ், மற்றும் கழக நண்பர்கள் உடனடியாக அன்புத்தம்பியை ராயப்பேட்டை அரசினர் மருத்துவமனைக்குக் கொண்டு போய்ச் சேர்த்தனர்.

ராயப்பேட்டை மருத்துவ மனையில் இதய நோய் தீவிர சிகிச்சைப் பகுதியில் அன்புத் தம்பிக்கு தீவிர சிகிச்சை அளிக்கப்படுகிறது. அன்புத் தம்பிக்கு மாரடைப்பு என்ற செய்தி கேட்டதும் போக்கு வரத்துத் துறை அமைச்சர் பொன்னையன் நேற்றிரவே மருத்துவ மனைக்கு விரைந்து ஒருமணி நேரத்திற்கும் அதிகமாக அங்கு தங்கி தீவிர சிகிச்சைகளுக்கு ஏற்பாடுசெய்தார்.

ஜேப்பியார், ஆடலழகன் ஜானகிராமன், ஆரோக்கிய தாஸ் மற்றும்பலர் இரவு முழுவதும் மருத்துவமனையிலேயே இருந்தனர்.

தகவலறிந்ததும் இன்று (செவ்வாய்) காலை நிதியமைச்சர் நாஞ்சிலார் மருத்துவமனைக்குவிரைந்து அன்புத்தம்பியின் உடல் நலம் குறித்து டாக்டர்களிடம் விசாரித்து அறிந்தார். தீவிரமான சிகிச்சை அளிக்குமாறு நாஞ்சிலார் கேட்டுக் கொண்டார்.

### காமராசன்

காலில் எலும்பு முறிவு காரணமாக கடந்த இரண்டு மாதமாக ராயப்பேட்டை மருத்துவமனையில் சிகிச்சை பெற்றுவரும் கவிஞர் நா. காமராசனையும் நாஞ்சிலார் பார்த்து ஆறுதல் கூறினார்.

## ஜாட்டிக்கு பதில் புதிய துணை ஜனாதிபதி

புதுடெல்லி அக். 3- துணை ஜனாதிபதி பி. டி. ஜாட்டி பதவிக்காலம் முடிகிறது. அவருக்குப் பதில் புதிய துணை ஜனாதிபதி தேர்ந்து எடுக்கப்பட இருக்கிறார்.

ஜாட்டியின் பதவிக் காலம் நவம்பர் மாதத்துடன் முடிவடைகிறது. அவரது பதவிக் காலத்தை நீடிக்க மத்திய அரசு விருப்பவில்லை என்று தெரிகிறது. எனவே புதிய துணை ஜனாதிபதியை நியமிப்பது என்றும் முடிவு செய்யப்பட்டிருப்பதாகக் கூறப்படுகிறது.

தற்போது மராட்டிய மாநில கவர்னராக இருக்கும் சாதிக் அலி துணை ஜனாதிபதியாக நியமிக்கப்படுவார் என்று கருதப்படுகிறது.

சாதிக் அலிமுன்பு பழைய காங்கிரஸ் தலைவராகஇருந்தவர். மொரார்ஜி தேசாயின் நெருங்கிய சகாவாக இருந்தவர்.

சஞ்சீவரெட்டி ஜனாதிபதியாக இருப்பதால் துணை ஜனாதிபதி பதவியை ஒரு முஸ்லிமுக்குக் கொடுக்க ஜனதா அரசு விரும்புகிறது.

அந்த வகையில் துணை ஜனாதிபதி பதவிக்கு சாதிக் அலியே பொருத்தமானவர் என்று மத்திய அரசு கருதுகிறது.

## திமுக.எம்.எல்.ஏ. நல்ல தம்பி பொய்ச்செய்தி: கழகத் தோழர் வழக்கு

சென்னை, அக். 3— பூங்காநகர் தொகுதி சட்டமன்ற தி. மு. க. உறுப்பினர் தி. சு. நல்ல தம்பியின் பொய்ச் செய்திக்கு பூங்காநகர் தொகுதி எம். ஜி ஆர். மன்றத்தலைவர் பெ. பெரியசாமி மறுப்பு தெரிவித்துள்ளார்.

ஒரு அறிக்கையில் பெரியசாமி கூறியிருப்பதாவது:

அனைத்திந்திய அண்ணா தி.மு.க.வைச் சேர்ந்தவர்களால் எனது உயிருக்கு ஆபத்து ஏற்படும் நிலைஇருக்கிறது என்று நல்லதம்பி போலீஸ் கமிஷனர் பரமகுருவிடம் புகார் மனு கொடுத்திருக்கிறார்.

இந்த மனுவில் அவர் சொன்ன வாசுதேவன், தட்சிணா, பாபு, முருகேசன் போன்றவர்கள் கழகத் தோழர்கள்என்றுகுறிப்பிட்டுள்ளது பொய்யானது. இவர்கள் தி. மு. க. வைச் சேர்ந்தவர்கள் என்பதற்கு ஆதாரம் உள்ளது.

### மாசு கற்பிக்க

கடந்த 12 2 78 அன்று நடந்த 48- வது வட்ட தி. மு. க. பகுதி பிரதிநிதி தேர்தலில் வாசுதேவன், முருகேசன் போன்றவர்கள் போட்டியிட்டுள்ளனர்.

கழக அரசுக்கு மாசு கற்பிக்கும் வகையில் உண்மைக்குப் புறம்பான தகவல்களை இவர் கொடுத்துள்ளார்.

இதுகுறித்து பத்திரிகை வாயிலாக தி. சு. நல்லதம்பி மன்னிப்பு கோரவேண்டும். இல்லாவிட்டால் அவர் மீது மான நட்ட வழக்கு தொடருவோம்.

இவ்வாறு பூங்காநகர் தொகுதி மன்றத் தலைவர் பெ. பெரியசாமி அறிக்கையில் கூறியுள்ளார்.

ராஜா அண்ணாமலைச்செட்டியாரின் நினைவுப் பரிசான ரூ. 10 ஆயிரம் காசோலையைநிதியமைச்சர் நாஞ்சிலார் எழுத்தாளர் பெரியசாமிதூரனிடம் அளித்தார்.

## இந்தியாவின் அனைத்து மாநிலங்களுக்கும்

# வழிகாட்டும் தமிழ்நாடு

## ஆளுநர் பட்வாரி புகழ்மாலை

சென்னை, அக் 3- "மதுவிலக்கை அமல் செய்வதில் தமிழ்நாடு இந்தியாவின் மற்ற மாநிலங்களுக்கு வழி காட்டுகிறது" என்று ஆளுநர் பிரபுதாஸ் பட்வாரி கூறினார்.

நேற்று மாலை கிண்டி காந்தி மண்டபத்தில் நடந்த காந்திஜி விழாவில் ஆளுநர் பிரபுதாஸ் பட்வாரி பேசியதாவது:

"காந்திஜியின் நிர்மாணத் திட்டத்தின் மூலம் தான் கிராமப்புறங்கள் மேம்பாடு பெறமுடியும். கிராமப்புறங்களின் முன்னேற்றத்தைப் பொறுத்தே இந்தியாவின் முன்னேற்றம் அமைந்திருக்கிறது என்று நம்பினார் காந்திஜி.

ஒவ்வொருவரும் கதர் வாங்குவதன் மூலமே இந்த தொழிலில் ஈடுபட்டுள்ள லட்சக்கணக்கான கிராமப்புற மக்களின் குடும்பங்களை காப்பாற்ற முடியும்.

### முதற்கடமை

மற்ற துணிகளை விட கதராத் துணிகள் உடலுக்கும் நல்லது விலையும் மலிவானது. கதர்த்துணிகளை வாங்க வேண்டும் என்பதை அனைவரும் முழு முதற் கடமையாகக் கொள்ளவேண்டும்.

கிராமப்புற மக்களின் பொருளாதார மேம்பாடு, வேலையின்மையை அகற்றுவது ஆகியவற்றை அடிப்படையாகக் கொண்டதே மாவட்டத்தொழில்மையங்கள். இன்னும் இரண்டு ஆண்டுகளில் தமிழ் நாட்டின் எல்லா கிராமங்களுக்கும் பாதுகாக்கப் பட்ட குடிநீர் கிடைத்துவிடும்.

காந்திஜியின் கனவுகளை, லட்சியங்களை நனவாக்குவதில் மற்ற மாநிலங்களுக்குமுன் உதாரணமாக தமிழ்நாடு திகழ்கிறது. மதுவிலக்கு சட்டத்தில் உள்ள ஓட்டைகள் அடைக்கப்பட்டுகடுமையான தண்டனைகள் வழங்க வகை செய்யும் சட்டம் இயற்றப் பட்டிருக்கிறது. மதுவிலக்கை ஏழை மக்களுக்காக காந்திஜி வலியுறுத்தினார்.

தமிழ்நாடும், குஜராத்தும் தான் மதுவிலக்கு பிரச்சினையில் மற்ற மாநிலங்களுக்குமட்டுமல்ல இந்தியாவுக்கே வழிகாட்டுகின்றன. பெண்கள் சம உரிமை பெறுவதிலும் தமிழக அரசு சிறப்பான பணிகளைப் புரிந்து வருகிறது.

இவ்வாறு ஆளுநர் பட்வாரி கூறினார்.

### முதல்வர் உறுதி

3-ம் பக்கம்

## போப் சாவில் மர்மம்

வாடிகன்நகரம், அக். 3- போப்பின் மரணத்தில் மர்மங்களும் சந்தேகங்களும் இருப்பதாக இத்தாலி ஏட்டில் செய்தி வெளி வந்திருக்கிறது, இறந்துபோன போப்பின் உடலை பிரேத பரிசோதனை செய்யாதது ஏன் என்று அந்த ஏடு கேட்டுள்ளது.

மேலவை கழக கொறடா அரிவழகனின் தந்தை கல்யாணசுந்தரனாரின் உருவப்படத்தை முதல்வர் புரட்சித்தலைவர் திறந்து வைத்தார். அவைத் தலைவர் நாவலர் அமைச்சர் கே. ஏ. கே. ஆகியோரும் படத்தில் உள்ளனர்.

## அண்ணல் அடிசுவட்டில் முதல்வர் புரட்சித்தலைவர்

### அமைச்சர் சுப்புலட்சுமி பேச்சு

சென்னை, அக். 3- அரசியலில் அறம் வேண்டும் என்று அண்ணல் காந்தியடிகள் சொன்னார் அந்த வழியில் புரட்சித தலைவர் செயலாற்றி வருகிறார் என்று அமைச்சர் சுப்புலட்சுமி கூறினார்.

மதுவிலக்கு கிராமக் கைத்தொழில் ஆகியவற்றில் மகாத்மா காந்தியின் கனவை முதல்வர் புரட்சித் தலைவர் நனவாக்கி வருகிறார் என்று அவர் தெரிவித்தார்.

இன்று காலை குறளகத்தில் காந்தி ஜெயந்தி விழாவையொட்டி கதர் விற்பனையை ஆளுநர் பட்வாரி துவக்கி வைத்தார்.

இந்த விழாவுக்கு அமைச்சர் சுப்புலட்சுமி தலைமை வகித்தார்.

அமைச்சர் சுப்புலட்சுமி மேலும் கூறியதாவது:

அரசியலில் அறம் வேண்டும் என்று காந்தியடிகள் சொன்னார் அந்த வழியில் புரட்சிததலைவர் செயலாற்றி வருகிறார்.

### தந்தை பெரியார்

சமுதாயப்புரட்சியை 20 ஆண்டுகாலத்தில்செய்தவா தந்தை பெரியார் ஆவார். முதன்முதலாக கதர் வாரியத்தின் தலைவ

(2-ம் பக்கம் பார்க்க)



அண்ணல் காந்தி பிறந்த நாளான நேற்று கடற்கரையில் உள்ள காந்தி சிலைக்கு அமைச்சர் எஸ் டி எஸ் மாலை அணிவித்தார்.

## குடி போதையில் சினிமா டைரக்டர்கள் கைது

சென்னை, அக். 3-குடி போதையில் இருந்த இரண்டு சினிமா டைரக்டர்கள் நேற்று கைதுசெய்யப்பட்டனர்.

ஏ டி ராஜன், கே ராகவன் ஆகிய இரு சினிமா டைரக்டர்களும் அபிராமிபுரம் பகுதியில் குடி போதையுடன் வந்தபோது போலீசாரால் கைது செய்யப்பட்டனர். அவர்கள் மீது வழக்குத் தொடரப் பட்டது.

நேற்று ஒரே நாளில் மூன்று கார்களில் சாராயம் கடத்தி வந்தவர்கள் கைது செய்யப்பட்டனர். மூன்று கார்களிலுமிருந்து ரூ.40 ஆயிரம் மதிப்புள்ள மதுவகைகள் பறி முதல் செய்யப்பட்டது, காரும் பறிமுதல்செய்யப்பட்டது.

அமைச்சர்ராகவானந்தம் தகவல்

## வேட்டமங்கலம் காலனிக்கு குடி தண்ணீர் திட்டம்

கரூர், அக்3- தொகுதியில் வேட்டமங்கலம்காலனிக்கு ரூ 51 ஆயிரம் செலவில் பொங்கலன்று முதல் குடிதண்ணீர்வழங்கும் திட்டம் செயல்படும் என்று அமைச்சர் ராகவானந்தம் கூறினார்

குடிதண்ணீர் இந்த கிராமத்தில்இல்லை என்றுகூறிய மூதாட்டிக்கு பதிலளித்து அமைச்சர் இவ்வாறு கூறினார்

அந்தமூதாட்டி புரட்சித் தலைவர் அரசு வாழ்க" என்று வாழ்த்துக் கூறினார்

## குமரி மாவட்ட மாணவத் தோழர்களுக்கு

குமரி மாவட்ட மாணவர் அமைப்பிற்கு (12-9-78) அன்று பொறுப்புகள் குறித்து விடுக்கப்பட்ட அறிவிப்பு தற்காலிகமாக நிறுத்தி வைக்கப்பட்டிருக்கிறது என்பதை தெரிவித்துக்கொள்கிறேன்.

ஆ. வெள்ளைச்சாமி
மாநில மாணவ அமைப்பாளர்

(5-ம் பத்தித் தொடர்ச்சி)

அளித்து வந்திருக்கின்றன. 18 சதவிகிதம் பேருக்கு வேலைவாய்ப்பு அளிக்கப்பட்டிருந்தால் இப்போது வேலையற்றிருக்கும் அரிஜன் யார் என்று தேடி கண்டுபிடிக்க வேண்டியநிலை இருக்கும்.

அரசுத் துறையில் எத்தனை அரிஜன மக்களுக்கு வேலை வாய்ப்பு அளிக்கப்பட்டுள்ளது என்பதைக் கேட்டிருக்கிறேன்.

குறைந்த அளவு வேலை வாய்ப்புஅளிக்கப்பட்டுள்ள இலாக்காக்களில் காரணம் கேட்டு அரசு நடவடிக்கை எடுக்கும்.

தாழ்த்தப்பட்ட சமுதாயம் உயர்வடைய வேண்டும். அதற்கான பணிகளில் நாம் ஈடுபடுவோம்.

இவ்வாறு அமைச்சர் சவுந்தரபாண்டியன் கூறினார்.

### அமைச்சர் ராஜாமுகமது கடும் கண்டனம்

# மொழிப்பிரச்சினையிலும் கருணாநிதி மோசடி

சென்னை, அக். 3- மொழிப்பிரச்சினையிலும் கருணாநிதி மோசடி நாடகமாடுகிறார். முதல்வராக இருந்தபோது கருணாநிதி இந்தியை எதிர்க்காதது ஏன்? என்று அமைச்சர் ராஜாமுகமது கேட்டார்.

சென்னை தியாகராயநகர் 105வது வட்டம் சிவப்பிரகாசம்தெருவில் தந்தை பெரியார்- பேரறிஞர் அண்ணா பிறந்தநாள்விழா பொதுக்கூட்டம் நடைபெற்றது. கூட்டத்திற்கு கந்தசாமி தலைமை வகித்தார். அமைச்சர் ராஜாமுகமது, டாக்டர் இரா. ஜனார்த்தனம் புரட்சிமணி சா. கோவிந்தசாமி, ஜெ. பாலன், வ. கோதண்டராமன், தி. நகர் மூர்த்தி, சைதை கண்ணன், ஆண்டாள்ரவூத், தஞ்சை பசுபதி, அன்பழகன், ராமன், பாலன், பட்டாபி மற்றும் பலர் பேசினர்.

### அறிஞரும் முட்டாளும்

அமைச்சர் ராஜாமுகமது பேசும்போதுகூறியதாவது:

தமிழ் சமுதாயம் உயர்வு பெறவேண்டும் என்பதற்காக தனது வருமானத்தை விட்டுவிட்டு ஓய்வு உறக்கமின்றி முதல்வர் புரட்சித் தலைவர் பாடுபட்டு வருகிறார்.

மேலைநாட்டில் ஒரு பழமொழி உண்டு - 'அறிஞர் நடக்க பயப்படும் இடத்தில் முட்டாள்கள் வேகமாக ஓடுவார்கள்' என்று சொல்வார்கள். அதுபோல் தி.மு.க.வினர் நம்மைச் சாடுவதில்வேகமாகத்தான் இருப்பார்கள். ஆனால், பொறுப்பில் உள்ள நாம் அடக்கமாக ஆரவாரமின்றி இருக்கவேண்டும்.

புரட்சித்தலைவர் தலைமையிலான கழக அரசை- அண்ணாவின் ஆட்சியைப் பற்றிக் கூறும் அரசியல் பார்வையாளர்கள் 'இந்த ஆட்சி சிறந்த முறையில் லஞ்ச ஊழலற்ற முறையில் செயல்பட்டு வருகிறது' என்று கூறுகிறார்கள். அந்த வகையில் மாற்றாரும் போற்றும் வண்ணம் அண்ணா வழியில் செயல்பட்டு வருகிறோம்.

### பொது நன்மை

அண்ணாவின் வழியில் முதல்வர் புரட்சித் தலைவர் செயல்பட்டு வருவதால் தான் அனைத்துத் தரப்பினரும் கழக அரசைப்பாராட்டுகின்றனர். பொதுநன்மை, பொது காரியத்தை சிந்தித்து செயல்பட்டு வருகிறார். தனி மனிதனைப் பற்றி கவலைப்படாமல் செயல்படுகிறார் புரட்சித்தலைவர். அதனால்தான் மக்களே பாராட்டுகிறார்கள்.

தந்தை பெரியார்- பேரறிஞர் அண்ணாவுக்கு விழா எடுக்கும் இந்த நேரத்தில் அவர்களது வாழ்வில்நடைபெற்ற சம்பவங்களைநமக்கு வழிகாட்டியாக எடுத்துக் கொள்ளவேண்டும்.

கருணாநிதி ஆட்சியில் இருந்த போதே பெரியார் விழாவை அரசு விழாவாக கொண்டாடியிருக்க முடியும். பெரியாரின் கொள்கைகளைத் துண்டு பிரசுரங்களாக அடித்து வினியோகித்திருக்க முடியும். ஆனால் செய்யவில்லை.

இன்றைக்கு புரட்சித் தலைவர் அரசு கொண்டு வரவிருக்கும் எழுத்து சீர்திருத்தத்தை அன்றைக்கே கருணாநிதி கொண்டு வந்திருக்க முடியும். ஏன் செய்யவில்லை?

பேரறிஞர் அண்ணாவின் விருப்பப்படி மற்ற மாநில முதல்வர்களை அழைத்துப் பேசி இந்தித் திணிப்புக்கு கண்டனம் தெரிவிக்கும் தீர்மானத்தைபுரட்சித்தலைவர் வெளியிட்டார்.

உடனே கருணாநிதியும் தனது கட்சி செயற்குழுவைக்கூட்டி இந்தியை எதிர்க்கிறோம் என்று தீர்மானம் போடவைத்தார். 1978ம் ஆண்டுஇந்தியையே எதிர்க்கிறோம் என்று தீர்மானம் போடும் கருணாநிதி 1973ல் ஏன் போட்டிருக்கக்கூடாது?

இவ்வாறு அமைச்சர் ராஜாமுகமது கூறினார்.

### வில்லிவாக்கம் தொகுதி

## அண்ணா தையல் தொழிலாளர் சங்கபொதுக்குழு

சென்னை, அக். 3- வில்லிவாக்கம் தொகுதி அண்ணா தையல் தொழிலாளர் சங்க பொதுக்குழு இன்று (3-10-78)மாலை 5 மணிக்கு 17, வடக்கு மாடவீதி வில்லிவாக்கம் காவல் நிலையம் எதிரில் கொ. அ. ஜார்ஜ் தலைமையில் என். கண்ணன் முன்னிலையில் நடைபெறுகிறது. தையல் கலை சம்பந்தப்பட்ட அனைவரும் தவறாது கலந்துகொள்ள வேண்டுகிறேன்.

டி. சண்முகம்

## தொழிலாளர் கமிஷனர் அலுவலகம் இடம் மாற்றம்

சென்னை, அக். 3-தொழிலாளர் நல கமிஷனர் (தொழிலாளர்நல இலாகா தலைமை அலுவலகம்), இணைக் கமிஷனர், தனித்துணை கமிஷனர் அலுவலகங்கள் இதுவரை சேப்பாக்கத்தில் இருந்து வந்தன. தற்போது அவை தேனாம்பேட்டை அண்ணா சாலையில் டி. எம். எஸ். கட்டிடத்தில் உள்ள தமிழ் நாடுதொழிலாளர்நலவாரியக் கட்டிடத்துக்குமாற்றப்பட்டுள்ளன. 1-ந் தேதி முதல் அந்தக் கட்டிடத்தில் 4-வது 5-வது மாடிகளில் இந்த அலுவலகங்கள் செயல்படுகின்றன. தொழிற்சாலை தலைமைஆய்வாளர் அலுவலகம், எடை அளவு கட்டுப்பாடு மற்றும் துணைக் கமிஷனர் (இன்ஸ்பெக்ஷன்) ஆகியோரின் அலுவலங்கள் மட்டும் தொடர்ந்து சேப்பாக்கத்தில் தற்போதுள்ள இடத்திலேயே செயல்பட்டு வரும்.

அலுவலக வேலை நேரம் காலை 10-30 மணி முதல் மாலை 5-00 மணிவரை.

### பேச்சாளர் முகவரி:

எரியீட்டி ராஜகோபாலன்
1. புஷ்பவதியம்மன் கோவில்வீதி
மேற்கு மாம்பலம்
சென்னை-33

சென்னையில் ராணி சீதை நினைவு அரங்கத்தை முதல்வர் புரட்சித்தலைவர் திறந்துவைத்தார். புதுவை துணை ஆளுநர் குல்கர்னி, எம். ஏ. எம். ராமசாமி ஆகியோர் படத்தில் உள்ளனர்.

### திருச்செங்கோடு தொகுதியில்

## 70 இடங்களில் கழக கொடிகள் ஏற்றினர் அமைச்சர் பொன்னையன்

திருச்செங்கோடு, அக். 3— திருச்செங்கோடு தொகுதியில் 70 இடங்களில் அமைச்சர் பொன்னையன் கழகக் கொடிகளை ஏற்றி வைத்தனர்.

திருச்செங்கோடு தொகுதி சிக்கநாயக்கன் பாளையம் கிராமத்தில் ரூபாய் 24,000 செலவில் கட்டிமுடிக்கப்பட்ட மேல்நிலை நீர்த்தேக்கத் தொட்டியை போக்குவரத்துத் துறை அமைச்சர் பொன்னையன் திறந்து வைத்து வைத்து உரையாற்றினார்.

விழாவிற்கு சட்டப் பேரவைஉறுப்பினர் முத்துசாமி தலைமை தாங்கினார். சிக்கநாயக்கன் பாளையம் ஊராட்சி மன்றத்தலைவர் விழாவிற்கு வந்திருந்தோரை வரவேற்றுப் பேசினார். ஊராட்சி ஒன்றியஆணையாளர் நன்றி தெரிவித்தார்.

தந்தை பெரியார் நூற்றாண்டு விழாவும், பேரறிஞர் அண்ணா 70வதுபிறந்ததின விழாவும், கொடியேற்று விழாவும், திருச்செங்கோடு தொகுதியின் பல்வேறு பகுதிகளில் நடந்தன, அவற்றில் அமைச்சர் பொன்னையன் கலந்து கொண்டார். தந்தை பெரியார்பிறந்ததின விழாவையொட்டி 100 நிகழ்ச்சி ஏற்பாடு செய்யப்பட்டு 100 நிகழ்ச்சிகளிலும் அமைச்சர் பொன்னையன் கலந்து கொண்டார்.

பேரறிஞர் அண்ணா பிறந்தநாளையொட்டி 70 இரும்புக் குழாய்களால் அமைக்கப்பட்ட பெரிய கம்பங்களில் கழக கொடிகளை ஏற்றி வைத்து அமைச்சர் பொன்னையன் உரையாற்றினார்.

திருச்செங்கோட்டில் வரலாறு காணாத வகையில் தந்தை பெரியார் நூற்றாண்டு விழாவும், பேரறிஞர் அண்ணா பிறந்த நாள் விழாவும் புரட்சித் தலைவரின் புனித ஆட்சியின் ஓராண்டு நிறைவு விழாவும் ஒட்டிய மாபெரும் பொதுக் கூட்டம் திருச்செங்கோடு நகரக் கிளையின் சார்பில் ஏற்பாடு செய்யப்பட்டது

(2-ம் பத்தி பார்க்க)

## கழகச் செய்திகள்

### திருச்சி

5-10-78வியாழன் மாலை 7 மணிக்கு காந்திமார்க்கட் பின்புறம் பிச்சைபிள்ளை தலைமையில் பேசுவோர்: கஸ்தூரி, சவுந்தரராசன் எம்.எல்.ஏ, மாணிக்கம் எம்.எல்.ஏ, தேவதாஸ், சேவியர் துரைராஜ், பரமசிவம், கரு. அன்புதாசன், நல்லுசாமி, மற்றும் பலர்.

### ஆரணி

7-10-78 சனிக்கிழமை மாலை 6 மணிக்கு முள்ளிப்பட்டு பிள்ளையார் கோயில் மைதானத்தில் கே. அருணாசலம் தலைமையில் தந்தை பெரியார்-பேரறிஞர் அண்ணா பிறந்தநாள் விழா நடக்கிறது. கே. அருணாசலம் தலைமையில் டி.கே. சீனிவாசன், வி. அர்ச்சுனன் எம்.எல்.ஏ, எம். சின்னக்குழந்தை. ஜெமினி ராமச்சந்திரன், க. அண்ணாமலை, எம். பெருமாள், டி. ஆர். ஜெகதீசன், ஆர்.எஸ். ராஜி, என். நடராசன், ஆகியோர் பேசுகின்றனர்.

### நுங்கம்பாக்கம்

3-10-78 செவ்வாய் மாலை 6 மணிக்கு காமராசபுரத்தில் ஆர். மனோகரன் தலைமையில் பேசுவோர்.

அமைச்சர் காளிமுத்து டாக்டர் ஹண்டே, எம்.எல்.சி, பாக்கூர் சுப்பிரமணியம் எம்.எல்.ஏ., பா. அங்கமுத்து, புலவர் ஏ. சு. மணி, புரட்சிமணி, சா. கோவிந்தசாமி, சதானந்தம், ஆறுமுகம், நுங்கை மாறன் மற்றும் பலர்.

### கீழவாசல்

4-10-78 புதன்கிழமை மாலை 4 மணிக்கு கீழவாசல் ஆட்டுமந்தை முன்லிம் தெருவில் மருத கோவிந்தராசன் தலைமையில் நடக்கும் தந்தைபெரியார் பேரறிஞர் அண்ணா பிறந்தநாளில் பேசுவோர்: டி. கே. சீனிவாசன். எம். சுந்தரம், பி. என். கே. அலி சேக்அப்துல்காதர் சக்தி முருகேசன், ஜே. நயினா முகமது, காசிநாதன், மற்றும்பலர்.

### வடபழனி

சென்னை 114வது வட்டம் கிளையின் சார்பில் நாளை (புதன்கிழமை) மாலை 6 மணிக்கு வடபழனியில் கழகப் பொதுக் கூட்டம் நடக்கிறது. உணவு அமைச்சர் எட்மண்ட், ஜெ. பாலன் சா. கோவிந்தசாமி சா. துரைசாமி கே.பி. தூயமணி, சந்திரா எஸ். டி. ராமையா, ஏ. பி. வரதராசன், என். ஆர். ஸ்டாலின், பி. ராமலிங்கம், எம். அரங்கநாதன் மற்றும் பலர் பேசுகிறார்கள். கூட்டத்துக்கு 114வது வட்ட அமைப்பாளர் பி. ஏ. கணபதி தலைமை தாங்குகிறார்.

### கீழகற்கண்டார் கோட்டை

4-10-78 புதன் மாலை 6-30 மணிக்கு தந்தை பெரியார், பேரறிஞர் அண்ணா பிறந்தநாள்விழா நடக்கிறது. இரா. மணவாளன் தலைமையில் கழக அவைத்தலைவர் நாவலர், எஸ்.வி.ராமசாமி எம் எல் ஏ, கே. என். சண்முகம் எம் எல் ஏ, சி. மாணிக்கம் எம் எல் ஏ, கே. சவுந்தரராசன் எம் எல் ஏ, டானியல், மருது நல்லதம்பி மற்றும் பலர் பேசுகின்றனர்.

(8ம் பத்தி தொடர்ச்சி)

பொதுக் கூட்டத்திற்கு திருச்செங்கோடு நகர அவைத்தலைவர் மனோகரன் தலைமை தாங்கினார். முத்துசாமி எம்.எல்.ஏ. தனபால் எம். எல். ஏ, வெங்கா கவுண்டர் எம். எல். ஏ, திருச்செங்கோடு ஒன்றிய அமைப்பாளர் நடேசன், நகர அமைப்பாளர் சண்முகசுந்தரம், பொருளாளர் செல்வராஜ் ஆகியோர் பேசினார்கள்.

### ஐயா- அண்ணா வழியில்

விழாவில் அமைச்சர் பொன்னையன் பேசியதாவது:-

தந்தை பெரியார், பேரறிஞர் அண்ணா வழியில் தமிழைக் காக்கவும் தமிழ் இனத்தைக்காக்கவும் அயராது உழைக்கும் உத்தமர் புரட்சித்தலைவரின் ஆட்சி தமிழகத்திலே பொன்னெழுத்துக்களால் பொறிக்கப்படவேண்டியது. இது தமிழகத்தின் பொற்காலம் என்றாலும் மிகையாகாது. தந்தை பெரியார், பேரறிஞர் அண்ணா பிறந்ததினங்களை அரசே ஏற்றுநடத்தும் விழாவாக செய்துகட்சிக்கு அப்பாற்பட்டு தமிழக மக்களின் பொது விழாவாக ஆக்கிய பெருமை புரட்சித் தலைவரையே சாரும்.

இவ்வாறு அமைச்சர் பொன்னையன் கூறினார்.

## கழக அரசுக்கு அனைத்து தொழிற்சங்கங்கள்- தலைவர்கள் புகழாரம்

சென்னை, அக் 3- சம்பள உயர்வு தந்த கழக அரசுக்கு அனைத்து தொழிற்சங்கங்களைச் சேர்ந்த தலைவர்கள் பாராட்டு தெரிவித்தனர்.

ஆசிரியர்களின் பணிக் காலம் ஒன்றையே அடிப்படையாகக்கொண்டு ஓய்வு ஊதியம் கணக்கிடப்படுவதை போலவே செலக்ஷன் கிரேடுக்கும் விசேஷ சம்பள கிரேடுக்கும் மொத்தப்பணிக்காலம் கணக்கிடப்படும் என்று அரசு அறிவித்திருப்பதை தமிழ் நாடு உயர்நிலைப்பள்ளி தமிழாசிரியர் கழகம் வரவேற்றுள்ளது.

தமிழகத்தில் முன் அமைக்கப்பட்ட இரு ஊதியக் குழுக்களால் இப்படிப்பட்ட பரிந்துரை செய்யப்படவில்லை. புரட்சிகரமான இத்திட்டத்தை இக்கழகம் மனமுவந்து பாராட்டி வரவேற்கின்றது என்று ஒரு அறிக்கையில் கூறப்பட்டிருக்கிறது.

### பென்ஷனர்கள் பாராட்டு

மன்னார்குடி பென்ஷனர்கள் சங்கத்தினர் கழக அரசைப் பாராட்டி ஒரு அறிக்கை வெளியிட்டுள்ளனர்.

பென்ஷன்தாரர்களுக்கு பென்ஷன் தொகையை 5 சதவீதம் உயர்த்தி 10 ரூபாய்க்குக் குறையாமலும் 25 ரூபாய்க்கு மேற்படாமலும் வழங்க முடிவு செய்ததற்கும் மொத்தத் தொகையை 100ரூபாயாக உயர்த்தியிருப்பதற்கும் தமிழக முதல்வருக்கும் நிதியமைச்சருக்கும் பாராட்டு தெரிவித்துக் கொள்கிறோம்.

இவ்வாறுபென்ஷனர்கள் சங்கத் தலைவர் வெங்கடேசன் கூறியுள்ளார்.

### ஆசிரியர் பேரவை

அனைத்து இந்திய ஆசிரியர் பேரவையின் தலைவர் கனகராஜ் வெளியிட்டுள்ள அறிக்கையில் அரசை பாராட்டி கூறியிருப்பதாவது:

ஊதியக்குழு அறிக்கையில் அளிக்கப்பட்ட ஆசிரியர்களுக்கான பரிந்துரைகள் அனைத்தும் ஒருமனதாக ஏற்றுக் கொண்ட தமிழ்நாடு அரசுக்கும், முதல்வர் புரட்சித்தலைவருக்கும், அமைச்சர் பெருமக்களுக்கும் 'அனைத்துஇந்திய ஆசிரியர் பேரவை' தனது வரவேற்பினையும் நல் வாழ்த்துக்களையும் தெரிவித்துக் கொள்கிறது' என்று அறிக்கையில் கூறியுள்ளார்.

தமிழ்நாடு பேரூராட்சி பணியாளர் சங்கம் அரசுக்கு நன்றியும்பாராட்டும் தெரிவித்து அறிக்கை வெளியிட்டுள்ளது.

'தமிழ்நாடு அரசின் 3-வது ஊதியக் குழுவின் முடிவுகளை தமிழ்நாடு பேரூராட்சி பணியாளர் சங்கம் வரவேற்று நன்றியை தெரிவித்துக்கொள்கிறது. ஊதியக் குழுவின் சிறப்பு அம்சமாக அரசு அலுவலர்களுக்கு ஒத்த நன்மை பேரூராட்சிப் பணியாளர்களுக்கு விஸ்தரிக்கப்பட்டதற்கு முதல்வர் புரட்சித் தலைவர் அறிவித்த புரட்சிகரமான அறிவிப்பிற்கு நன்றி தெரிவித்துக் கொள்கிறோம்

இவ்வாறு சங்கத் தலைவர் வே. சுவாமிநாதன் அறிவித்துள்ளார்.

### அமைச்சர் சுப்புலட்சுமி பேச்சு

(1-ம் பக்கத்தொடர்ச்சி)

ராக பெரியார்தான் இருந்தார். கதரைத் தோளில் சுமந்து விற்றார்.

நேற்று (திங்கள்) முதல் சிறப்புத்தள்ளுபடி அறிவிக்கப்பட்டது. நேற்றுமட்டும் இங்கு 1 லட்சத்து 67 ஆயிரத்துக்கு கதரும், 1 லட்சத்து 17 ஆயிரத்திற்கு கைவினைப் பொருள்களும் விற்பனையாகி இருக்கின்றன.

கோடிக்கணக்கில் விற்பனை ஆகும் என்ற நம்பிக்கையை இது ஏற்படுத்தியிருக்கிறது."

இவ்வாறுஅமைச்சர் சுப்புலட்சுமி பேசினார்.

குறளக தலைமை அதிகாரி பாலகிருஷ்ணன் பேசும் போது, கடந்த ஆண்டு காந்தி ஜெயந்தி விழாவின் போது ரூபாய் 400 லட்சத்துக்கு விற்பனை ஆயிற்று. இந்த ஆண்டு ரூ. 500லட்சம் விற்பனையாகும் என்று நம்பிக்கை தெரிவித்தார்.

குறளக நிர்வாகி ஆதிநாராயணன் நன்றிகூறினார்.

### அரிசனங்களும்- மலைவாழ் மக்களும்

## நாட்டின் இருகரங்கள்: அமைச்சர் சவுந்தரபாண்டியன் பேச்சு

சென்னை, அக். 3- நாட்டின் இரு கரங்களான அரிசனங்கள், மலைவாழ் மக்கள் வலுவும், வளமும் பெறும் பணிகளைத் தமிழகஅரசு செய்து வருகிறது என்று அமைச்சர் சவுந்தரபாண்டியன் கூறினார்.

சென்னை தியாகராய நகரில் உள்ள தக்கர்பாபா வித்யாலயாவில் காந்தி பிறந்ததினம் கொண்டாடப்பட்டது. அங்கு அரிஜனங்களும் ஜாதி இந்துக்களும் ஒன்றாக அமர்ந்து உணவு சாப்பிட்டனர்.

விழாவில் தமிழக ஆளுநர் பட்வாரி, அமைச்சர் சவுந்தரபாண்டியன், கிருபளானி, விழுப்புரம் நகரில் இருந்து ஜாதி இந்துக்கள் 5 பேரும் அரிஜன தலைவர்கள் 5பேரும் வந்திருந்து கலந்து கொண்டனர்.

நூல்நூற்பதில் வெற்றி பெற்ற மாணவர்களுக்கு ஆளுநர் பட்வாரிகதராடைகள் வழங்கினார்.

அமைச்சர் சவுந்தரபாண்டியன் பேசும் போது கூறியதாவது :-

காந்தியடிகளின் எண்ணத்தை நிறைவேற்றும் வகையில் அவரது பிறந்த நாளில் நாம் இங்கே கூடியிருக்கிறோம்,

அரிசனங்களும் மலைவாழ் மக்களும் நமதுநாட்டின் இருகரங்கள் என்று ஆளுநர் பேசும்போது குறிப்பிட்டார். இந்த இரு கரங்களையும் வலுப்படுத்தும் பணியில் மத்திய அரசும் மாநில அரசும் தீவிரமாக கவனம் செலுத்துகிறது;

நமது நாடு சுதந்திரமடைந்து 31ஆண்டுகளாகியும் ஒரு கரத்தை(அரிசன்) தான் பார்த்து வந்தது. இப்போது மற்றொரு கரத்தை(மலைவாழ்மக்கள்) வலுப்படுத்துவதில் தமிழக அரசு அக்கறை செலுத்தி வருகிறது.

அவர்களது பொருளாதாரத்தை உயர்த்துவதில் தீவிரமாக பாடுபட்டு வருகிறது.

மலைவாழ்மக்களை உயர்த்த வேண்டும் என்பதற்காக 8 கோடியே 40 லட்சத்து 58 ஆயிரம் ரூபாய்ஒதுக்கப்பட்டுள்ளது. கடந்த ஆண்டு ஒருகோடிரூபாய் செலவிடப்பட்டது. இந்த ஆண்டு 2 கோடி ரூபாய் செலவிடப்படும். மலைவாழ் மக்களின் மேம்பாட்டில் தான் நமது நாட்டின் முன்னேற்றம் இருக்கிறது.

### மாணவர்போட்டி ரூ. 15 ஆயிரம் உதவி

காந்தியடிகளின் பிறந்த நாளில் நடத்தப்படும் பள்ளி மாணவர் போட்டிக்கு பரிசளிக்க இந்த வித்யாலயம் 10ஆயிரம் ரூபாய் தருவதாகச் சொன்னார்கள். அதற்காக அரிசன நலத்துறை 15ஆயிரம் அளிக்கிறது.

(பலத்த கை தட்டல்)

இந்த இருதொகைகளும் சேர்த்து காந்தியடிகள் நினைவு பரிசாக டெபாசிட் செய்து அதிலிருந்து வரும் வருவாயைக் கொண்டு பரிசளிக்கப்படும்.

தமிழகம் முழுதுமுள்ள அரிசன மாணவர்-மாணவிகள் இந்த போட்டியில் பங்கு பெறுவார்கள். அடுத்த ஆண்டுமுதல்இந்த போட்டி தொடங்கும்.

(கைதட்டல்)

இந்த நிறுவனத்தினர் எத்தனையோ முறை முன்பிருந்த அரசுகளிடம் தங்களின் கோரிக்கைகளை வைத்திருக்கின்றனர். அவை அத்தனையும் புறக்கணிக்கப் பட்டிருக்கின்றன

### உதவித் தொகை உயர்வு

இங்கே நீங்கள் கேட்காமலேயே இந்த நிறுவன மாணவர்களுக்கு அரசு உதவிதொகையைஉயர்த்தி 25 ரூபாய் என்பது 35 ரூபாயாக அளிக்கப்படும்.

(பலத்த கைதட்டல்)

1947ம் ஆண்டு அரிஜனங்களுக்கு 18 சதவிகித வேலை வாய்ப்பு அளிக்க வேண்டும் என்று சட்டமியற்றப் பட்டது.

ஆனால் இதுவரை இருந்த அரசுகள் 10 சதவிகிதம் பேருக்குத்தான் வேலை

(1-ம் பத்தி பார்க்க)





தங்கமணி பப்ளிகேஷனுக்காக 275, அவ்வை சண்முகம் சாலை. சென்னை-600014 என்ற முகவரியிலிருந்து கே. ரவீந்திரனால் வெளியிடப்படுகிறது. அச்சிடுபவர்: பி. தங்கராஜன், நவசக்தி அச்சகம், கச்சேரிசாலை, சென்னை 600004.
ஆசிரியர்: எம். ஜி. சக்ரபாணி

# அண்ணல் காந்தியடிகள் கொள்கை நிறைவேற பாடுபடுவோம்: முதல்வர் உறுதி

சென்னை, அக். 3— அண்ணல் காந்தியடிகளின் கொள்கை நிறைவேற தமிழக அரசு தொடர்ந்து பாடுபட உறுதி கொண்டுள்ளது என்று முதல்வர் புரட்சித் தலைவர் கூறினார்.

அண்ணல் காந்தியடிகள் பிறந்த நாளில் முதல்வர் வெளியிட்டுள்ள செய்தியில் தெரிவித்திருப்பதாவது:

அக்டோபர் இரண்டாம் நாள் அண்ணல் காந்தியடிகள் பிறந்தநாள். இந்தியத் திருநாட்டில் விடிவெள்ளி தோன்றிய நாள். இந்த நன்னாளில் உத்தமர் காந்தியடிகளின் நினைவைப் போற்றுகிற நாம் அவருடைய லட்சியங்களை நினைவு கூர்ந்து அந்த இலட்சியங்களுக்கு நம்மை ஆட்படுத்திக் கொள்ள முயற்சிப்போம்.

உத்தமர் காந்தியடிகள் இந்தியத் துணைக்கண்டத்திற்கு விடுதலை பெற்றுத் தந்தபோது இந்த நாட்டின் கிராமப்புறங்களில் வாழும் கோடானுகோடி ஏழை எளிய மக்கள் நல்வாழ்வு பெற, எல்லாத்துறைகளிலும் அடிமைத்தனம் அகன்ற சுதந்திர வாழ்வு பெறவேண்டுமென்று கனவு கண்டார்கள்.

ஏழை எளிய கிராமப்புற மக்களுக்கு சமுதாயத்தில் ஏற்றத்தாழ்வற்ற தீண்டாமை எனும்கொடிநோய் அகன்ற சாதிபேதம் அற்றசமத்துவ வாழ்வு கிடைக்க வேண்டுமென விரும்பினார்கள். ஏழைகளை மேலும் ஏழைகள் ஆக்கி, இறுதியில் வாழ்வையே அழிக்கும் நஞ்சு போன்ற குடிப்பழக்கம் ஒழிய வேண்டும் என்றும், பொருளாதார மேம்பாடு அடைய கிராமப்புறத் தொழில்கள் வளர்ச்சி அடையவேண்டும் என்றும் வற்புறுத்தினார்கள். ஆனால், இவ்வளவு இலட்சியங்களும் நிறைவேறி விட்டனவா என்று எண்ணிப்பார்க்கவேண்டிய நிலையில்தான் நாடு இருக்கிறது; நாமும் இருக்கிறோம்.

உத்தமர் காந்தியடிகளின் இந்தக் கொள்கைகள் நிறைவேற, தமிழக அரசு தொடர்ந்து பாடுபட உறுதி கொண்டுள்ளது என்பதை இந்நன்னாளில் அரசின் சார்பில் உறுதியோடு தெரிவித்துக் கொள்கிறேன்.

தமிழகஅரசு மேற்கொள்ளும் ஆக்கப் பணிகளுக்கு அனைவரும் முழு ஒத்துழைப்பைத் தரவேண்டுமென வேண்டிக்கேட்டுக் கொள்கிறேன்.

இவ்வாறுமுதல்வர் புரட்சித்தலைவர் தமது செய்தியில் கூறியுள்ளார்.



## மூப்பனார் ராஜினாமா ஏற்பு

சென்னை, அக். 3- தமிழ்நாடு இந்திராகாங்கிரஸ் தலைவர்பதவியிலிருந்து விலக மூப்பனார் முடிவு செய்து இந்திரா காந்திக்கு ராஜினாமா கடிதத்தை அனுப்பியது தெரிந்ததே. மூப்பனாரின் ராஜினாமாவை ஏற்க இந்திரகாந்தி சம்மதித்து விட்டார். மூப்பனாருக்கு பதில் யாரை தலைவராகத் தேர்ந்தெடுக்கலாம் என்பது பற்றி இந்திராகாந்தி தீவிரமாக ஆலோசித்து வருகிறார்.

✻

## புதிய போலீஸ் நிலையம்திறப்பு

சென்னை, அக். 3- சென்னை சூளை, ஐ.சி.எப். ஆகிய இடங்களில் புதிய போலீஸ் நிலையங்கள் திறக்கப்பட இருக்கின்றன. இத்தகவலை நகர போலீஸ் கமிஷனர் பரமகுரு நிருபர்களிடம் தெரிவித்தார்.

✻

## வெள்ளம்: 1 கோடி மக்கள் அவதி

கல்கத்தா, அக். 3- மேற்கு வங்காளத்தில் ஏற்பட்டுள்ள வெள்ளப்பெருக்கால் 1 கோடியே 48 லட்சம் மக்கள் பாதிக்கப்பட்டுள்ளனர்.

35 ஆயிரம் சதுர கிலோ மீட்டர் பகுதி வெள்ளத்தில் மூழ்கிக் கிடக்கிறது. வெள்ளத்தில் மூழ்கி இதுவரை 147 பேர் இறந்துவிட்டதாகமேற்குவங்காள அரசு அறிவித்துள்ளது.

✻

## புதுக்கோட்டை தோழர்களுக்கு

புதுக்கோட்டை, அக். 3- புதுக்கோட்டை மாவட்ட திருமயம் ஒன்றியத்திலுள்ள கிளைக்கழகங்களின் நிர்வாகிகள் கூட்டம் வருகிற 10 ந் தேதி முற்பகல் 10 மணிக்கு மன்றப் பணிமனையில் நடக்கிறது. நிர்வாகிகள் அனைவரும் தவறாது கலந்து கொள்ளுமாறு திருமயம் ஒன்றிய பொறுப்பாளர் வீர. சுப்பையா தெரிவிக்கிறார்.

---

தி. மு. க. புகாருக்கு சூடான பதில்;

## தாயகம் திரும்பியோர் மறுவாழ்வுதிட்டங்கள்: பி. டி. எஸ். தகவல்

ராணிப்பேட்டை, அக். 3— தாயகம் திரும்பியோருக்கான பல்வேறு மறுவாழ்வுத் திட்டங்களை தமிழகஅரசு நிறைவேற்றியிருக்கிறது என்பதற்கான ஆதாரங்களை அமைச்சர் பி. டி. எஸ். எடுத்துரைத்தார்.

மத்தியவீட்டுவசதி, மறுவாழ்வுத்துறை அமைச்சர் சிக்கந்தர் பக்த் தாயகம் திரும்பியோருக்கான 169 குடியிருப்புக்களை ராணிப்பேட்டையில் திறந்துவைத்தார். விழாவிற்கு தலைமை வகித்த அமைச்சர் பி. டி. சரஸ்வதி கூறியதாவது:-

"இங்கே தொழிலாளர் நல மருத்துவமனை அமைக்கப்படவில்லை என்று துரைமுருகன் எம். எல். ஏ. கூறினார். இங்கே அமைக்கப்பட்டுவரும் மருத்துவமனை தொழிலாளர்நலமருத்துவமனையாக இன்னும் இரண்டு மாதங்களில் செயல்படத் துவங்கும் என்று தெரிவித்துக் கொள்கிறேன்.

மேலும் துரைமுருகன் பேசுகையில் இங்கே உள்ள சில கிராமங்களில் இருந்த தாயகம் திரும்பியோர் 30 பேர் வறுமையால் இறந்துவிட்டதாக தவறான தகவலைக் கூறினார்.

நான் இங்கே உள்ள கோட்டாட்சித் தலைவரை அணுகி இதைப்பற்றிக் கேட்டபோது அப்படிப்பட்ட சம்பவம் நடக்கவில்லை என்று கூறினார்.

சொந்த காரணங்களுக்காக இருவர் தற்கொலை செய்து கொண்டுள்ளனர். அவர்களது குடும்பத்திற்கு அரசு நிதி உதவியளித்திருக்கிறது.

தமிழக வீட்டு வசதி வாரியம் 169 குடியிருப்புகளை இலங்கையிலிருந்து தாயகம் திரும்பியவர்களுக்காக கட்டியுள்ளது. இந்த கட்டிடங்கள் அமைந்துள்ள 19.45 ஏக்கர் பரப்பளவு நிலத்தை தமிழக அரசு இலவசமாக கொடுத்துள்ளது.

இதற்காக வழங்கிய கடனுதவியை மத்தியஅரசு மானியமாகஆக்கவேண்டும் என்று இங்கே பேசிய துரைமுருகன் குறிப்பிட்டார். மத்திய அரசு ஏற்கனவே பல்லாயிரக்கணக்கான மதிப்பில் நிதி உதவி செய்திருக்கிறது.

இப்பொழுது இதை இங்கே சொல்லுபவர்கள் (திமுகவினர்) தங்கள் ஆட்சிக் காலத்தில் ஏன் இதைச் செய்திருக்கக் கூடாது? செய்திருக்கலாமே என்று எங்களால் கேட்க முடியும்.

1974-வது ஆண்டு ஒப்பந்தப்படி 6 லட்சம் பேர் இலங்கையிலிருந்து தாயகம் வரயிருக்கிறார்கள். அவர்கள் அத்தனை பேருக்கும் மறுவாழ்வு அளிக்கும் நிலையில் அரசு இருக்கிறது.

கூடலூர் என்ற இடத்தில் மட்டும் ஆயிரத்து 500 இலங்கையிலிருந்து குடிபெயர்ந்தவர்களை தேயிலைத் தோட்டங்களில் பணிக்கு அமர்த்தியுள்ளோம்.

டான்சிதொழில் நிறுவனத்தில் பலருக்கு வேலை வாய்ப்புகள் கொடுக்கப்பட்டிருக்கிறது. முன்பு இவர்களுக்கு நாள்தோறும் ரூபாய் 70 காசு ஊதியமாக வழங்கப்பட்டது. அது தற்போது 5 ரூபாய் 50 காசாக உயர்த்தப் பட்டிருக்கிறது.

மத்திய அரசு இதுவரை தாயகம் திரும்பியோர் மறுவாழ்விற்காக 237 லட்சம் ரூபாயை வழங்கியுள்ளது. இதனால் பயன் பெற்ற குடும்பங்களின் எண்ணிக்கை 13 ஆயிரத்து 800 ஆகும்.

குடிநீர் வசதிக்காக செலவிட்ட 47 ஆயிரத்து 200 ரூபாயை மத்திய அரசு முழுக்க மானியமாக அளித்துள்ளது. அதற்காகமத்திய அரசுக்குநன்றிதெரிவித்துக் கொள்கிறேன்.

இவ்வாறு அமைச்சர் பி. டி. எஸ். கூறினார்.

---

# மதுகுடித்தால் 3 மாதம்; விற்றால் 5 ஆண்டு;

## விஷசாராயம் விற்றால்

# ஆயுள் தண்டனை

## மது அரக்கனை ஒழிக்க கழகஅரசு அவசர சட்டம்

சென்னை, அக். 3- மது அரக்கனை ஒழிக்கவும், ஏழை மக்களை வாழ்விக்கவும் கழக அரசு அவசரச் சட்டம் பிறப்பித்துள்ளது. இதன்படி மது குடித்தால் 3 மாதமும், மது விற்றால் 6 மாதமும் ஜெயில் தண்டனை கிடைக்கும். விஷ சாராயம் விற்பவர்களுக்கு ஆயுள் தண்டனை வழங்கப் படும்.

மதுவிலக்கு குற்றம் புரிவோர்களுக்கு கடுமையான தண்டனை விதிக்க சட்டமியற்றப்படும்என்று முதல்வர் புரட்சித்தலைவர் அறிவித்தது தெரிந்ததே. இதன்படி திருத்தப்பட்ட அவசர சட்டத்தை ஆளுநர் பட்வாரி பிறப்பித்திருக்கிறார்.

இந்த அவசரச் சட்டம் நேற்று முதல் அமலுக்கு வந்தது.

### இரட்டிப்பு தண்டனை

புதிய சட்டத்தில் கூறப்பட்டு இருக்கும் விவரங்கள் பின்வருமாறு:

★ பர்மிட் இல்லாமல் மது அருந்தினால் அது முதல் குற்றமாக இருந்தால் அவருக்கு குறைந்தபட்சம் 3 மாத ஜெயில் தண்டனை விதிக்கப்படும்.

★ அரசு ஊழியராக உள்ள ஒருவர் பெர்மிட் இல்லாமல் மது அருந்தினால் அது முதல் குற்றமாக இருந்தால் அவருக்கு 6 மாத சிறைத்தண்டனை விதிக்கப்படும்.

★ பெர்மிட் இல்லாமல் மது அருந்துவோருக்கு அதிகபட்சம் 3 ஆண்டு கடுங்காவல் தண்டனையும் ரூ 3 ஆயிரம் அபராதமும் விதிக்கப்படும்.

★ கள்ளச்சாராயம் காய்ச்சி விற்பவர்களுக்கு குறைந்த பட்சம் 5 ஆண்டுகளும், அதிகபட்சம் 10 ஆண்டு கடுங்காவல் தண்டனையும் கிடைக்கும். இந்த குற்றம் புரிபவர் பொதுஊழியராக இருந்தால் குறைந்தபட்சம் 7 ஆண்டுஜெயில் தண்டனை விதிக்கப்படும்.

குடிப்பவர்களை கொல்லக்கூடிய அல்லது ஏதாவது உறுப்பைப் பாதிக்கக்கூடிய விஷத்தன்மை கொண்ட சாராயம்அல்லதுபோதைப் பொருள் விற்பவர்களுக்கு ஆயுள் தண்டனை விதிக்கப்படும்.

அவற்றை உட்கொள்பவர்கள் செத்துவிட்டால் விற்றவர்களுக்கு ஆயுள் தண்டனையோடு அபராதமும் சேர்த்து விதிக்கப்படும்,

★ குடிப்பதைத் தவிர மற்ற எல்லா மதுவிலக்கு குற்றங்களுக்கும் அதிக பட்சம் 5 ஆண்டு ஜெயில் தண்டனையும் ரூ 7 ஆயிரம் அபராதமும் உண்டு. குறைந்த பட்ச தண்டனை பொது ஊழியர்களுக்கு ஒரு ஆண்டு ஜெயிலும் மற்றவர்களுக்கு 6 மாத ஜெயிலுமாக இருக்கும்.

இந்த குற்றங்களை இரண்டாவது முறையாக செய்தால் பொது ஊழியர்களுக்கு 2 ஆண்டுகளும், மற்றவர்களுக்கு ஒருஆண்டு ஜெயில் தண்டனையும் விதிக்கப்படும். இத்துடன் ரூ. 3 ஆயிரத்துக்கு குறையாமல் அபராதமும் விதிக்கப்படும்.

### ஜாமீன் இல்லை

★ மதுவிலக்கு குற்றங்களின் கீழ் தண்டனை அடைந்தவர்கள் நன்னடத்தையின் பேரிலோ அல்லது எச்சரிக்கை செய்தோ விடுதலை செய்யப்படமாட்டார்கள்.

கள்ளச்சாராயம், கடத்த பயன்படுத்தப் படும் வாகனங்கள், கால் நடைகளை கைப்பற்ற சம்பந்தப்பட்ட அதிகாரிகளுக்கு இந்த சட்டம் அதிகாரம் அளிக்கிறது. அவற்றை பறிமுதல் செய்யும் படி உத்தரவிட நீதிமன்றத்துக்கும் அதிகாரம் அளிக்கிறது.

★ ஸ்பிரிட் விற்பனை செய்பவர்கள் அல்லது விற்க முயற்சிப்பவர்களுக்கு 5 ஆண்டுவரை ஜெயில் தண்டனை உண்டு.

### ஊர் கடத்தல்

★ மதுவிலக்கு குற்றம் புரிய சதித்திட்டம் போடுகிறவர்களுக்கு 5 ஆண்டு வரை ஜெயில் தண்டனையும் ரூ 7 ஆயிரம்வரை அபராதமும் விதிக்கப்படுகிறது.

★ மதுவிலக்கு குற்றத்தை மூன்று அல்லது மூன்றுக்கு மேற்பட்ட தடவை செய்பவர்களை 2 ஆண்டு காலத்துக்கு அதிகப்படாமல் வேறு ஊரில் சென்று வசிக்கும்படி உத்தரவிட நீதிபதிக்கு அதிகாரமுண்டு.

மேற்கண்டவாறு அந்த சட்டத்தில் கூறப்பட்டுள்ளது.

---

ராணுவத்தினருக்கு

## வழங்கும் கடனுதவி அதிகரிப்பு

சென்னை, அக். 3- சிறு தொழில்கள் நடத்த முன்னாள் ராணுவத்தினருக்கு வழங்கப்படும் கடனுதவி இதுவரை 5ஆயிரம் ரூபாய் என்று இருந்தது.

அந்தத்தொகை 25 ஆயிரம் ரூபாயாக உயர்த்தப் பட்டுள்ளது. இதற்கான வட்டி கட்டுவதற்கு தொகுப்பு நிதியிலிருந்து குறிப்பிட்டி வட்டி விகிதத்தை உதவித் தொகையாகப் பெற்றுக்கொள்ளலாம்.

இந்தத்திட்டத்தின் முழு விவரங்களையும் முன்னாள் ராணுவத்தினர் அவர்களது மாவட்டத்திலுள்ள முன்னாள் படை வீரர்கள் வாரிய அலுவலகங்களிலிருந்து பெற்றுக் கொள்ளலாம்.

---

## எஸ். டி. எஸ். சுற்றுப்பயணம்

சென்னை, அக். 3- விவசாய வருமான வரிசட்ட முன் வடிவை ஆலோசனை செய்வதற்காக வருவாய்த் துறை அமைச்சர் எஸ். டி. எஸ். தலைமையில் குழு அமைக்கப்பட்டுள்ளது.

வருவாய்த்துறை அமைச்சர் எஸ். டி. எஸ். தலைமையில் உள்ள இக்குழு 6, 7, தேதிகளிலும் நீலகிரி மாவட்டத்திற்கு ஊட்டியில் உள்ள "தமிழகம் இல்லத்திற்கு வருகிறது.

9-ந் தேதி காலை 10 மணிக்கு கோவைமாவட்ட ஆட்சித் தலைவர் அலுவலகத்தில் குழு கூடுகிறது. 10 ந் தேதி காலை 10 மணிக்கு சேலம் கூட்டுறவு மத்திய வங்கிக் கட்டிடத்தில் குழு கூடுகிறது.

விவசாய வருமான வரி பற்றிய குழுவிற்கு ஆலோசனை கூற விரும்புப் விவசாய அமைப்புகள் ஏனைய சங்கங்கள் மேற்படி தேதிகளில் குழுவினரை சந்தித்து ஆலோசனை கூறலாம்.

---

## முதியோர் கல்விக்கு அரசு உதவி: முதல்வர் புரட்சித்தலைவர் செய்தி

சென்னை, அக். 3- தேசிய முதியோர் கல்வித் திட்டத் துக்கு அரசின் எல்லா உதவிகளும் அளிக்கப்படும் என்று முதல்வர் புரட்சித் தலைவர் கூறினார்.

தேசிய முதியோர்கல்வித் திட்டத்தினையொட்டி முதல்வர் புரட்சித் தலைவர் விடுத்துள்ள செய்தியில் கூறியிருப்பதாவது:

ஒவ்வொருவருக்கும்கல்வி கற்க உரிமை இருக்கிறது என அகில உலக மனித உரிமைச் சாசனம் அறிவிக்கிறது. மனிதனுடைய கௌரவத்திற்கு எல்லோருக்கும் கல்வி பரவிடும் பண்பாடு ஆகியவை இன்றியமையாதவை. நாட்டின் சமுதாய பொருளாதார வளர்ச்சிக்கு முதியோர் கல்வி பெரிதும் அவசியம் என உணரப்படுதல் ஒரு நல்ல அறிகுறி. நாம் இழந்தவற்றை மிகக் குறுகிய காலத்தில் ஈடுகட்ட வேண்டும். அப்போதுதான் உலகில் ஏற்படுகின்ற வளர்ச்சியுறு மாற்றங்களை நாம்அடைய முடியும். எனவே அறியாமையை அகற்ற நவீன முறைகளை நாம் பின்பற்ற வேண்டியது மிகவும் அவசியம்.

அறியாமையை அகற்றவும், ஆரம்பக் கட்ட சிரமத்தை நீக்கவும், தேவையான ஒருஇயக்கத்தினை உருவாக்குதல், சரியான திக்கில் எடுக்கப்படுகின்ற முதல் நடவடிக்கை என்பதில் எவ்வித அட்டியும் இல்லை, என்றாலும் அவைகளே போதுமானவையும் அல்ல. நன்கு திட்டமிடப்பட்ட பின் நடவடிக்கைகள் இவ்வியக்க அணுகு முறைக்கு ஒத்தாசையாக இருக்க வேண்டும்.

அக்டோபர் திங்கள் 2-ம் நாளாகிய காந்திஜெயந்தி அன்று தொடங்கப்படுகின்ற தேசிய முதியோர் கல்வித் திட்டத்திற்கு அரசின் எல்லா உதவிகளும் உண்டு. அரசே இதனை நிறைவேற்றிட முடியாது. ஆகவே இத்தகைய சிறப்புமிக்க திட்டத்தினை வெற்றி நடை போடச் செய்ய ஒவ்வொரு குடிமகனும் அவரால் இயன்ற பங்கினை ஆற்றிட வேண்டும் என நான் கேட்டுக் கொள்கிறேன்.

இவ்வாறு முதல்வர் புரட்சித்தலைவர்செய்தியில் கூறியுள்ளார்.

---

## காந்திஜியின் வழியில் கழக அரசு: சவுந்தர பாண்டியன் பெருமிதம்

சென்னை, அக். 3- காந்திஜியின் கனவுகளை நனவாக்க கழக அரசு அனைத்து முயற்சிகளையும் மேற்கொண்டுள்ளது என்று அமைச்சர் சவுந்தரபாண்டியன் கூறினார்.

நேற்று மகாத்மா காந்தியின் 110 வது பிறந்த நாள் விழா கிண்டியில் உள்ள காந்திமண்டபத்தில் நடந்தது. விழாவில் அமைச்சர் சவுந்தரபாண்டியன் பேசியதாவது:-

காந்திஜியின் லட்சியங்களை நடைமுறைப்படுத்த அனைத்து வழிகளிலும் கழக அரசு திட்டமிட்டு செயல்பட்டு வருகிறது. சாதிகளை ஒழிக்க வேண்டும் என்று காந்தி நினைத்தார். ஏற்றத்தாழ்வுகளை ஒழிக்க வேண்டும் என்பதற்காக கலப்பு திருமணத்துக்கு தமிழக அரசு ஊக்கமளிக்கிறது. இன்று கூட காந்தி சிலை அருகே 63 ஜோடிகளுக்கு ஆளுநர் தலைமையில் கலப்புத் திருமணம் நடந்தது. அந்த திருமணசெலவுக்காக அரசு முன்பணமாக ரூ. 5 ஆயிரம் கொடுத்தது.

அரசு மாணவர் விடுதிகளில் எல்லா தரப்பட்ட ஜாதி மாணவர்களும்சேர்க்கப்படுகிறார்கள். ஜாதி வேறுபாட்டை ஒழிக்க அந்த விடுதிகளில் வழிமுறைகள் வகுக்கப்பட்டுள்ளன. தாழ்த்தப்பட்ட ஜாதியின் முன்னேற்றத்தைப் பெரிதும் விரும்பினார் காந்திஜி. எந்த அரசும் செய்திராத வகையில் தாழ்த்தப்பட்ட மக்களுக்கு வீட்டுமனை வழங்க ஒரு கோடி ரூபாய் ஒதுக்கியது கழக அரசு. மலைவாழ் மக்கள்முன்னேற்றத்துக்கு ரூ. 8 கோடி ரூபாய்மதிப்பீட்டில் நீண்டகால திட்டம் வகுக்கப்பட்டு கடந்த ஆண்டு ஒரு கோடி ரூபாயும், இந்த ஆண்டு 2 கோடி ரூபாயும் ஒதுக்கப்பட்டுள்ளது.

மதுவிலக்கை தீவிரப்படுத்த கடுமையான முறையில் சட்டமியற்றப்பட்டு செயல்படுத்தப்படுகிறது. எளிமையாக இருக்கவேண்டும் என்ற காந்திஜியின் வேண்டுகோள் அமைச்சர்கள் மட்டுமல்ல தமிழக அரசின் எல்லாத் துறைகளிலும் நிறைவேற்றப்பட்டு வருகிறது.

இவ்வாறு அமைச்சர் சவுந்தரபாண்டியன் கூறினார்.

### சுப்புலட்சுமி

விழாவில் அமைச்சர் சுப்புலட்சுமி ஜெகதீசன் பேசும்போது "காந்தியடிகள் எந்தவகையில்மாநிலங்கள் இருக்க வேண்டும்

(4-ம் பக்கம் பார்க்க)

---

## எல்லார்வி மறைவு: புரட்சித்தலைவர் இரங்கல்

சென்னை, அக். 3- பிரபல தமிழ் எழுத்தாளர் எல்லார்வி கடந்த 1ந்தேதி மாலை மறைவு எய்தினார். அவரது மறைவுச் செய்தி கேட்ட முதல்வர் புரட்சித்தலைவர் இரங்கல் தெரிவித்துள்ளார்.

எல்லார்வியின் முழுப் பெயர் எல். ஆர். விஸ்வநாத சர்மா ஆகும். இவரது வயது 64. கடந்த சில நாட்களாக உடல்நலக் குறைவால் சென்னைபொது மருத்துவமனையில் சேர்க்கப்பட்டு சிகிச்சை பெற்று வந்த அவர் கடந்த 1-ந் தேதி மரணம் அடைந்தார்.

சுமார் 2 ஆயிரம் சிறுகதைகளும் 160 நாவல்களையும் இவர் எழுதியிருந்தார். இவருக்கு மனைவியும் இரு மகன்களும் 4 மகள்களும் உள்ளனர்.

இரங்கல் செய்தியில் முதல்வர் புரட்சித்தலைவர் கூறியிருப்பதாவது:.

சிறந்த தமிழ் எழுத்தாளர்களில் ஒருவரும், நல்ல பண்பாளருமான எல்லார்வி அவர்கள் இயற்கை எய்திய செய்தி அறிந்து பெரிதும் துயரமடைந்தேன். கடந்த 40 ஆண்டுகாலமாக எழுத்துப் பணியை சிறந்த முறையில் அனைவரும் பாராட்டும்படி ஆற்றிவந்த எல்லார்வியின் மறைவு தமிழ் எழுத்துலகிற்கு பேரிழப்பாகும். அவரது பிரிவால்துயருற்றுள்ள அவருடைய குடும்பத்தினருக்கும் நண்பர்களுக்கும் என்னுடைய ஆழ்ந்த இரங்கலை தெரிவித்துக் கொள்கிறேன்.

இவ்வாறு முதல்வர் புரட்சித்தலைவர் கூறியுள்ளார்.

# அண்ணா


**சந்தா விவரம்**

| | | |
|---|---|---|
| 1 வருடச் சந்தா தொகை | ரூ. | 120 |
| 6 மாதச் சந்தா தொகை | ரூ. | 60 |
| 3 மாதச் சந்தா தொகை | ரூ. | 30 |

3 மாதத்திற்கு குறைவான சந்தா தொகை ஏற்றுக் கொள்ளப்பட மாட்டாது

நிர்வாகி

"அண்ணா"

275, அவ்வைசண்முகம் சாலை, சென்னை-600 014.


# 65 லட்சம் பேர் பயன் பெறும் முதியோர்கல்வித்திட்டம்

## அரங்கநாயகம் துவக்கினார்

**சென்னை, அக். 3- சுமார் 65 லட்சம் பேர் பயன் பெறும் தமிழ்நாடு தேசிய முதியோர் கல்விக் திட்டத்தை கல்வி அமைச்சர் அரங்கநாயகம் தொடங்கி வைத்தார்.**

ஐந்து ஆண்டுகளில் எழுத்தறிவு பெறாத அனைவருக்கும் கல்வி அளிக்கும் பொருட்டு அரசு திட்டம் தீட்டியுள்ளது. இதன்படி வரும் 5 ஆண்டுகளில் 65 லட்சம் பேர் பயனடைவர்.

இதற்காக தமிழகம் முழுவதும் 34 ஆயிரம் முதியோர் கல்வி நிலையங்கள் தொடங்கவுள்ளன. அவற்றில் ஒன்பது ஆயிரத்து 900 நிலையங்கள் நேற்று துவக்கிவைக்கப்பட்டன. இதனால் 29 ஆயிரத்து 700 பேர் பயன் பெறுகின்றனர்.

## சென்னை

சென்னை நகரில் மட்டும் 15 நிலையங்கள் நேற்று தொடங்கி வைக்கப்பட்டன. இதனால் 560 பேர் பயன்பெறுகின்றனர். இந்த ஆண்டு மட்டும் 10 லட்சத்து 36 ஆயிரம் பேர் இத்திட்டத்தால் பயன் பெறுவர்.

தமிழ்நாடு தேசிய முதியோர் கல்வித் திட்டத் தொடக்கவிழா நேற்று ராஜாஜி மண்டபத்தில் நடந்தது. கல்வியமைச்சர் அரங்கநாயகம் திட்டத்தை துவக்கி வைத்துப் பேசியதாவது:-

"நான் அமைச்சராக பொறுப்பேற்று ஒருவருடத்துக்கு மேலாகிறது. இது வரை எத்தனையோ பொது நிகழ்ச்சிகள் - பல்வேறு நிகழ்ச்சிகளில் கலந்து கொண்டுபேசியிருக்கிறேன்.

ஆனால் இந்த விழாவில் ஏற்படுகின்ற உணர்வுவேறு நிகழ்ச்சிலும் எனக்குஏற்பட்டதில்லை. காந்தி அண்ணல் பிறந்த இந்த புனித நாளில் இந்த திட்டம்துவக்கப்படுவது மகிழ்ச்சிக்குரிய ஒன்றாகும்.

கடந்த 30 ஆண்டு கால பொது வாழ்க்கையில் நாம் பேசி வந்ததை உண்மையில் செயலாக்கும் தருணம் வந்துள்ளது.

நகரத்தில் படித்தவர்கள் பெரும் அளவில் இருப்பதால் நகரம் எல்லா வளத்தையும் பெற்று உள்ளது. கிராமங்களில் படித்தவர்கள் எண்ணிக்கை குறைவு என்பதால் அதன் வளர்ச்சி குன்றிப்போய் இருக்கிறது.

கிராமப்புறமக்கள் படிக்கிறார்கள். அப்படி படிக்கிறவர்கள் அங்கேயிருப்பதில்லை. இதனால் கிராமம் வளரமுடியவில்லை. இதனால் குறைபாடு உள்ளது. இந்நிலையைப் போக்க அங்கேஎழுத்தறிவு இல்லாமல் இருப்பவர்களுக்கு எழுத்தறிவு போதிக்க வேண்டும்.

## மூன்று எருமைகள்

ஒருநாள் ஒரு கிராமவாசியைச் சந்திக்க புலவன் ஒருவன்வருகிறான். புலவன் அவனை நோக்கி உன் மகன் என்ன செய்கிறான் என்று கேட்கிறான்.

உடனே கிராமவாசி எனக்கு இரண்டு எருமைகள் உள்ளன. அவற்றை அவன் மேய்க்கிறான் என்று சொல்கிறான்,

உடனேபுலவன் "உன்னிடம் இரண்டு எருமைகள் இருக்கிறது என்று இனி சொல்லாதே! மூன்று எருமைகள் இருக்கிறது என்று சொல்" என்கிறான்.

இது எதைக் குறிக்கிறது? கல்வியறிவு இல்லாவிட்டால் மனிதன் எவ்வளவு தாழ்வாகக் கருதப்படுகிறான்என்பது தெரிகிறதல்லவா?

சமுதாயத்தின் எல்லாப் பகுதி மக்களும் கல்வியறிவு பெற்றாக வேண்டும். ஜனநாயகம் வலிவுள்ளதாக இருக்க வேண்டுமென்றால் அனைவருக்கும் எழுத்தறிவு அளிக்க வேண்டும். அனைவரும் எழுத்தறிவு உள்ளவராக இருப்பது நல்லது. விவரம் தெரிந்தவர்களால் தான் ஜனநாயகம் வளரும். ஜனநாயக அமைப்பு பாதுகாப்பாக இருக்கும்.

இந்தத் திட்டத்தை வெற்றி பெறச் செய்ய அனைத்து அரசியல் கட்சிகளும் ஈடுபட்டு உதவி புரிய வேண்டும்.

கல்வி என்பதுபயன் தரக்கூடிய ஒன்றாக வாழ்க்கையை உயர்த்தக்கூடியதாக- வாழ்க்கையோடு இணைந்ததாக இன்றைய தினம் தமிழகத்தில் தரப்பட்டிருக்கிறது.

## மது குடிப்பது குறைந்துள்ளது

இரண்டு மாதங்களுக்கு முன் "ரீடர்ஸ் டைஜெஸ்ட்" என்ற பத்திரிகையை நான் படித்தேன். பிரேசில் நாட்டில் முதியோர் கல்விக்காக மக்கள் இயக்கம் நடத்தியிருக்கிறார்கள். அதிலேமுதியோர் கல்வி புகுத்தப்படும் முன்பு இருந்த நிலைக்கும், புகுத்தப்பட்ட பிறகு உள்ள நிலைக்கும் என்ன வேறுபாடு என்று ஒரு கிராமத்து பெரியவரை கேட்டிருக்கிறார்கள். அதற்கு அந்தப் பெரியவர் மது குடிப்பவர்களின் தொகை முன்பு இருந்ததை விட பாதியாக குறைந்துள்ளது என்றார்.

கல்வி அறிவு இல்லாவிட்டால் மனிதர்கள் சராசரி குறைந்தபட்ச அறிவு இல்லாமல் வாழ்க்கையில் கெட்டுப் போய்விடுகிறார்கள் அவர்களுக்கு எழுத்தறிவு அளிக்கும்போது சிந்திக்கும் சுபாவம் வந்து விடுகிறது. மற்றவர்களைப் போலவே தாமும் ஒழுக்கான நல்வாழ்க்கை வாழவேண்டும் என்ற எண்ணம் ஏற்படுகிறது.

இளைஞர்களும் மாணவர்களும் தொழிலாளர்களும்- ஆண்கள் பெண்கள் அத்துணைபேரும் கல்வி அறிவு புகட்டும் இந்த புனித காரியத்தில் ஈடுபடவேண்டும்.

## புரட்சித்தலைவர் அறிவிப்பு

தந்தை பெரியார், நூற்றாண்டு விழாவின் போது முதல்வர் புரட்சித் தலைவர் அறிவிப்பு ஒன்றை வெளியிட்டார். பெரியார் கையாண்ட எழுத்து சீர்திருத்தத்தை அரசு பின்பற்றும் என்ற அறிவிப்பை செய்தார். அது பின்பற்றப் பட்டால் 15 எழுத்துக்கள் குறையும். இது முதியோர் கல்வித் திட்டத்துக்கு பெரும் உதவி செய்யும்.

பொதுஉடைமைக் கொள்கைகளை பரப்பும் கம்யூனிச நாடுகள் முதியோர் கல்வி திட்டத்தில் பெரும் வெற்றி பெற்றுள்ளன. அந்நாடுகளின் முன்னேற்றத்துக்கு இதுவே அடிப்படைக் காரணம் ஆகும்.

முதியோர் கல்வித் திட்டம் வெற்றிகாணச் செய்ய அனைவரும் தங்களை இதில் ஈடுபடுத்திக்கொள்ளவேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன்.

இவ்வாறு அமைச்சர் அரங்கநாயகம் பேசினார்.

## கல்வி அமைச்சருக்கு பாராட்டு

விழாவிற்கு தமிழ்நாடு முதியோர் கல்வி வாரியத் துணைத் தலைவர் நெ. து. சுந்தரவடிவேலு தலைமை வகித்தார்.

அவர் பேசுகையில்தனது 30ஆண்டு கால தமிழக அரசியல் வரலாற்றில் கல்வியாளர் ஒருவர் கல்வி அமைச்சராக இருந்ததில்லை என்றும், ஆசிரியர் ஒருவரை கல்வியமைச்சராக ஆக்கியது குறித்தும் தமிழக முதல்வருக்கு நெ. து. சுந்தரவடிவேலு பாராட்டுத் தெரிவித்தார்.

கல்வித்துறை செயலாளர் சி. ஜி. ரங்கபாஷ்யம் வரவேற்புரையாற்றினார். இந்திய தேசிய முதியோர் கல்விக் கழகத் தலைவர் டாக்டர் மால்கம் ஆதிசேஷய்யா, உள்ளாட்சித் துறை செயலாளர் டி. விவாகதேவன், பள்ளிக் கல்வி இயக்குநர் டாக்டர் வெங்கடசுப்ரமணியன், சென்னை மாவட்ட ஆட்சித் தலைவர் வெங்கடாசலம், சென்னை மாநகராட்சி ஆணையர் எம். பெரியசாமி ஆகியோர் பேசினர். முதன்மை கல்வி அலுவலர் நரசிமுத்து வாழ்த்துச்செய்திகளைபடித்தார். முறைசாரா மற்றும் முதியோர் கல்விஇயக்குநர் ஜே. ஏ. ரயான் நன்றி கூறினார்.

## காந்தி சிலைக்கு அமைச்சர்கள் மாலை

சென்னை, அக். 3- சென்னை மெரினா கடற்கரையில் உள்ள காந்தி சிலைக்கு கழகத்தின் சார்பில் மாலைகள் அணிவிக்கப்பட்டது.

தமிழக அமைச்சர்கள் கே. ஏ. கே., எஸ். டி. எஸ், அரங்கநாயகம், ராகவானந்தம், சவுந்தரபாண்டியன், பொன்னையன், குழந்தைவேலு, சவுந்தரராசன், பி. டி. சரஸ்வதி, சுப்புலட்சுமி ஆகியோர் மாலை அணிவித்தனர்.

சத்யா பத்மநாபன், தலைமைக் கழக துரை, நாஞ்சில் வின்சென்ட் எம்.எல்.ஏ. டாக்டர் ஹண்டே எம்.எல்.சி., ஜேப்பியார், அன்புத்தம்பி, அப்துல் காதர், நிலவழகன், அங்கமுத்து, அடியார், ஜெ. பாலன், மதுசூதனன் சைதை துரைசாமி, எரியீட்டி ராஜகோபால், கு.க செல்வம், ஆண்டாள் ரவூக், ஆண்டாள், மீனாம்பிகை, தி. நகர் மூர்த்தி, நாராயணசாமி தோட்டம் மாயன். சோழிங்கநல்லூர் கோவிந்தசாமி மற்றும் பலர் கலந்துகொண்டனர். ஏராளமான கழகத் தோழர்களும் கலந்து கொண்டு சிறப்பித்தனர்.

## சவுந்தர பாண்டியன் புகழாரம்

(3-ம் பக்கத் தொடர்ச்சி)

என்றுவிரும்பினாரோ அந்த திட்டங்கள் அனைத்தையும் தமிழகஅரசு நிறைவேற்றி வருகிறது. கிராம ராஜ்யத்தை உருவாக்க கிராமத் தொழில்களுக்கு ஊக்கமளிக்கப்படுகிறது என்று குறிப்பிட்டார்.

கலப்புத்திருமணம்செய்து கொண்ட கண்ணன்-ஜெயலட்சுமி, பொ. விநாயகம்-பானுமதி ஆகிய ஜோடிகளுக்கு ஒன்றரை சவரன் தங்கப்பதக்கமும், ரூபாய் இருநூறும் வழங்கப்பட்டது.

## கிருபளானி

விழாவில் கிருபளானி பேசும்போது "தீண்டாமை சாதி ஒழிப்புஆகிய காந்திஜியின் லட்சியங்களை செயல்படுத்த அனைவரும் சபதம் ஏற்க வேண்டும்" என்று கேட்டுக் கொண்டார்.

தமிழக அரசு செய்தித் துறை ஏற்பாடுசெய்திருந்த காந்தி கண்காட்சியையும் கிருபளானி திறந்து வைத்தார்.

# அய்யா-அண்ணாவுக்கு கழகம் எடுத்த விழா

## மணப்பாறை

மணப்பாறையில் தந்தை பெரியார்- பேரறிஞர் அண்ணா பிறந்தநாள் விழா நடந்தது. ஏழைகளுக்கு உணவு வழங்கப்பட்டது. விளையாட்டுப் போட்டிகளும் நடைபெற்றது. ர. மணி தலைமையிலும் ஆர். எச். திவாகர் முன்னிலையிலும் பொதுக்கூட்டம் நடந்தது. கூட்டத்தில் சி.மாணிக்கம் எம்.எல். ஏ. கி.நடராசன், ப.துரைசாமி பி. சர்தார், பழனிச்சாமி கந்தசாமி மற்றும் பலர் பேசினர்.

## சாலிக்கிராமம்

சாலிக்கிராமம் பகுதியில் தந்தை பெரியார் பேரறிஞர் அண்ணா பிறந்தநாள் விழா கொண்டாடப்பட்டது. கே. எம். அப்துல் ரசாக் எம். எல். ஏ. வழக்கறிஞர் ராமகிருஷ்ணபாபு எஸ். எம். துரையரசன், கே. தேவராஜ், எஸ். வி. ஸ்ரீராமுலு, ஏ. ராமு, கே. எஸ். ராமரத்தினம், டி. எஸ். ராமசாமி, ஒழுங்கரசு கே. பாபு, கே. புருஷோத்தமன் மற்றும்பலர் பேசினர்

## ஆவடி

ஆவடி, காமராஜர் நகர் கித்தலக்குண்டு, ஆறுமுகம் நினைவுமன்றத்தின் சார்பில் தந்தை பெரியார்- பேரறிஞர் அண்ணா பிறந்த நாள் விழா நடந்தது. கன்னியப்பன் தலைமையில், செல்லையா, முகமது யாசின், செ. கணேசன், ஆவடி குமார், தீ.மோகன், மணி, மனோகரன், முனி கிருஷ்ணன், கிருஷ்ண தாஸ், ஜெயராமன் ஆகியோர் பேசினா.

## விருத்தாசலம்

விருத்தாசலத்தில்தந்தை பெரியார் - பேரறிஞர் அண்ணா பிறந்தநாள்விழா நடைபெற்றது. கே.ராசன் கி. ராமனுதன் எம்.எல்.ஏ மற்றும்பலர் அண்ணா சிலைக்கு மாலையணிவித்தனர். நகரில்பலஇடங்களில் கழகக் கொடிகள் ஏற்றப்பட்டன. ஆர். கணேசன், ஆர். விருத்தகிரி, ஆர்.வி. கிரி மற்றும்பலர் விழாவில் கலந்து கொண்டனர்.

## புளியந்தோப்பு

வடசென்னை 47 - வது வட்டம் புரட்சித் தலைவர் மன்றம், நாஞ்சிலார் படிப்பகம் சார்பில் பெரியார்- அண்ணா விழா நடைபெற்றது.

விழாவுக்கு ரத்தினமணி தலைமை தாங்கினார். கோவை அண்ணாநம்பி, மு.ப.மாரி, பெரியசாமி, மனோகரன், ஆண்டவர் மற்றும்பலர் பேசினர்.

## தியாகதுர்க்கம்

தென்னாற்காடு மாவட்டம் தியாக துர்க்கத்தில் தந்தை பெரியார்-பேரறிஞர் அண்ணா பிறந்த நாள் விழா கொண்டாடப்பட்டது. சின்ன சேலம் தொகுதி கழக சட்டமன்ற உறுப்பினர் சுப்பிரமணியம் தலைமையில் நடந்த கூட்டத்தில் எஸ். கஸ்தூரி மற்றும் பல கழகத் தோழர்கள் பேசினர்.

## சிதம்பரம்

சிதம்பரத்தில்தந்தைபெரியார்- பேரறிஞர் அண்ணா பிறந்த நாள் விழா நடைபெற்றது. விழா நிகழ்ச்சிகளுக்கு எஸ். ஜெயபால் தலைமை வகித்தார். கே. ஆர். கணபதி கழகக்கொடியை ஏற்றினார். குழந்தைகளுக்கான பாடப்புத்தகங்களை இரத்தின பாலகுருசாமி எம். எல். சி வழங்கினர். விழாவில் இனிப்பு வழங்கப்பட்டது. இரவு நடந்த கூட்டத்தில் இரத்தின. பாலகுருசாமி எம். எல்.சி., கே.ஆர். கணபதி, முத்து. தில்லைவில்லாளன், இராம. ஆதிமூலம் மற்றும் பலர்பேசினர்.

# திருவல்லிக்கேணி தொகுதி மகளிர் பிரிவினருக்கு பி. டி. எஸ். அறிவிப்பு

திருவல்லிக்கேணி தொகுதியைப் பொறுத்தவரை திருமதி டி. கனகம்மாள் மட்டும்தான் பெருமதிப்பிற்குரிய பொதுச் செயலாளர் புரட்சித்தலைவர் அவர்களால் அதிகாரபூர்வமாக அறிவிக்கப்பட்டு செயல்பட்டு வருகிறார். தொகுதியில் உள்ள மகளிர் மன்றங்களும், அவருடைய பொறுப்பில்தான் இயங்கி வருகின்றன.

90-வது வட்டத்தைச் சார்ந்த திருமதி ராணி- திருவல்லிக்கேணி தொகுதியில் மகளிர் அமைப்பில் எந்த பொறுப்பிலும் இல்லை என்பதை தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

திருவல்லிக்கேணி தொகுதி தோழியர்கள் அனைவரும் வழக்கம்போல் திருமதி கனகம்மாளுடன் இணைந்து செயலாற்ற வேண்டுகிறேன்.

பி. டி. சரஸ்வதி
மகளிர் பிரிவு செயலாளர்
அனைத்திந்திய அண்ணா தி. மு. கழகம்

சென்னை
3-10-78

சென்னை வியாசர்பாடியில்பர்மாஅகதிகளுக்கான குடியிருப்பு திட்ட தொடக்க விழாவில் முதல் வர் புரட்சித் தலைவர், மத்திய அகதிகள் மறுவாழ்வு அமைச்சர் சிக்கந்தர் பக்த் ஆகியோர் கலந்து கொண்டனர்.

# கடற்கரையில் நடந்த 63கலப்புத்திருமணங்கள்

சென்னை, அக். 3- கடற்கரையில் காதலர்கள் தான் கூடுவார்கள். இல்லங்களில் தங்களின் அன்பைவெளிப்படுத்த முடியாதவர்கள் கடற்கரையில் சங்கமிப்பார்கள்.

ஆனால் . . .

காதலித்து கல்யாணம் கைகூடாதவர்கள்.. பொருளாதார நெருக்கடியால் திருமணம் செய்து கொள்ள முடியாதவர்கள் இந்த சமூகம் நம்மை கணவன்-மனைவியாக அங்கீகரிக்குமா என்று அஞ்சி ஒதுங்கியே தம்பதிகளாக வாழ்ந்தவர்கள்.,.

அத்தனை பேருக்கும் தேசப்பிதா சிலை முன்னிலையில்கலப்புத் திருமணம்.

ஆமாம். சென்னை மெரினா கடற்கரையில் தேசப்பிதா காந்தியடிகளின் பிறந்தநாளான அக்டோபர்2ம் தேதியன்று தேசப்பிதாவின் திருவுருவச்சிலை முன்பு கலப்புத் திருமணம் நடைபெற்றது.

உழைக்கும் மகளிர்சங்கத்தின் சார்பில் சங்கத் தலைவி ஜெயா அருணாசலம் இந்த திருமணத்தை ஏற்பாடு செய்திருந்தார்.

அதிலும் காந்தியடிகளின் கனவான இன்றைய தமிழக அரசின் எண்ணமான தாழ்த்தப்பட்ட மக்களின் வாழ்வு முன்னேறவேண்டும் என்ற கருத்தை அடிப்படையாக கொண்டு உழைக்கும் மகளிர் சங்கம் இத்திருமணங்களை ஏற்பாடு செய்திருந்தது.

அரிசன மணமகன் பிராமண மணமகள், அரிசன மணமகன் உயர்ஜாதி இந்துப் பெண். மாாவாடி மணமகள்- தாழ்த்தப்பட்ட மணமகன் இப்படி எத்தனையோ ஜோடிகள்.

தமிழக ஆளுநர் பிரபுதாஸ் பட்வாரி இத்திருமணங்களை நடத்தி வைத்தார். அரிசன நலத்துறை அமைச்சர் சவுந்தரபாண்டியன் திருமண விழாவுக்கு தலைமை தாங்கினார்.

அமைச்சர்சவுந்தரபாண்டியன் மணவிழாவுக்கு தலைமை ஏற்று பேசும் போது:

ஜாதி மத பேதமற்ற சமுதாயத்தை உருவாக்குகிறோம் என்று உதட்டளவிலேயே சிலர் சொல்லிக் கொண்டிருக்கும் காலத்தில் உழைக்கும் மகளிர் சங்கத்தினர் அதை செயல்படுத்தி காட்டுவது பாராட்டத்தக்கது.

இது போன்ற நிகழ்ச்சிகள் தான் அண்ணல் காந்தியடிகளின் எண்ணத்தை புரட்சித் தலைவரின் கழக அரசின் கருத்தை நிறைவேற்றக் கூடியதாக இருக்கும்.

காந்தியடிகள் வெளிநாடு சென்[...] படிப்பதை அவரது உறவினர்கள் தீண்டாஜமாக கருதியதுண்டு. அவர் அதையும் முறியடித்தார்.

ஜாதியை ஒழிக்க வேண்டும் என்று சொல்லிக் கொண்டிருந்தால் மட்டும் போதாது. அதை ஒழிக்கும்பணியை மேற்கொள்ள வேண்டும்.

பொருளாதாரத்தில் பின் தங்கியவர்கள் தங்கள் திருமணங்களை நடத்தக்கூடிய வசதி இன்றி இருக்கிறார்கள் அப்படிப் பட்டவர்களுக்கு திருமணம் செய்து வைக்க முன்வந்திருக்கும் மகளிரை பாராட்டுகிறேன்.

இங்கே நடைபெறும் திருமணத்திற்காக அரசிடம் ஒரு தம்பதிக்கு 115 ரூபாய் மானியம் கேட்டார்கள். ஆனால் நாங்கள் 150 ரூபாய் தருகிறோம் என்பதை தெரிவித்துக் கொள்கிறேன்.

(கைதட்டல்)

ஏற்கனவே 115 ரூபாய் என்று உத்தரவிட்டிருந்தால் கூட 50 ரூபாய் என்று மாற்றியிருப்பேன்.

(பலத்த கைதட்டல்)

## அடுத்த ஆண்டு 200 திருமணம்

இந்த ஆண்டு 63 தம்பதிகளுக்கு திருமணம் நடத்தியிருக்கிறார்கள். அடுத்த ஆண்டு குறைந்த பட்சம் 200 தம்பதிகளுக்கு திருமணம் நடத்திவைக்க வேண்டும்.

கலப்புத் திருமணம் செய்து கொண்ட தம்பதிகளுக்கு இதுவரை அரசின் உதவி காலதாமதமாகத்தான் கிடைத்து வந்திருக்கிறது. இனி அந்த உதவிகள் மூன்று மாத காலத்திற்குள் அவர்களுக்கு போய் சேரும்.

குஜராத் மாநிலத்தில் கலப்புத் திருமணத்தம்பதிகளுக்கு 5 ஆயிரம் ரூபாய் வழங்கி வருகிறார்கள். அதுபோல் தமிழகத்திலும் திட்டம் கொண்டு வரலாமா என்பது பற்றி யோசித்து வருகிறோம்' என்றுபேசினார்.

இந்த திருமண தம்பதிகளுக்கு அளிக்கப்பட்ட வேட்டி- சட்டை, புடவை சோளி, தாலி உட்பட 215 ரூபாயாகிறது. ஏறக்குறைய மொத்தம் 10 ஆயிரம் ரூபாய் செலவு செய்திருக்கிறார்கள்.

ஒரு சாமான்ய குடும்பத்து திருமணச்செலவில் உழைக்கும் மகளிர் சங்கத்தினர் 63 திருமணங்களை நடத்தி வைத்திருக்கின்றார்.

தமிழக ஆளுநர் பட்வாரி திருமணங்களை நடத்தி வைத்து மணமக்களை வாழ்த்திப் பேசும் போது, "இங்கேஒருபுறம் கடலரசன் அலைகொண்டு உங்களை வாழ்த்துகிறான். மறுபுறம் மகாத்மா காந்திஜி வாழ்த்துகிறார். மற்றொரு புறம் இங்கே கூடி நிற்கும் ஆயிரக்கணக்கான மக்கள் வாழ்த்துகிறார்கள்.

உங்களது சீர்திருத்த திருமணம் மகத்தானது. உங்களுக்காக நல்ல எதிர்காலம் காத்திருக்கிறது. உங்கள் வாழ்க்கையை- நீங்கள் எப்படி குடும்பம் நடத்துகிறீர்கள் என்பதை நாட்டுமக்கள் உன்னிப்பாக கவனித்து வருவார்கள்.

ஆகவே நீங்கள் ஒருவரை ஒருவர் புரிந்து கொண்டு குடும்பம் நடத்தவேண்டும். கடவுளர்களையே பெண்களுக்கு அடுத்தபடியாக ராதாகிருஷ்ணா, உமாபதி, சீதாராமா என்றுதான் அழைக்கிறார்கள். அதுபோல் பெண்களுக்கு முக்கியத்துவம் கொடுத்து மாப்பிள்ளைகள் நடந்து கொள்ளவேண்டும்.

நாட்டில் பெருகிவரும் மக்கள் தொகையை கட்டுப்படுத்தும் வகையில் இரண்டே மக்களைப்பெற்று குடும்பமும் நாடும் நலமடைய ஒத்துழைக்க வேண்டும்.

எந்த நேரத்திலும் ஆண்கள் மது அரக்கனை நினைக்கவும் இடங்கொடுக்காமல் பெண்கள் பார்த்துக் கொள்ள வேண்டும். குடிக்க மாட்டோம் என்று ஆண்கள் சபதமேற்கவேண்டும்.

தமிழக மக்களின் சார்பில் தமிழக அரசின் சார் மணமக்களை வாழ்த்துகிறேன்" என்றார்.

## "மது அருந்த மாட்டோம்"

மதுவை அருந்தக்கூடாது என்று ஆளுநர் பட்வாரி கூறியதும் மணமகன்கள் 'குடிக்க மாட்டோம்' என்றுதங்கள் கைகளை உயர்த்தி சபதம் எடுத்தனர்.

மங்கலநாணை குறைந்த காலத்தில் செய்து தந்த நடராசன் என்பவருக்கு ஆளுநர்பொன்னாடைபோர்த்தினார். அழைப்பிதழ் அச்சிட்டு வினியோகித் திருந்தால் கூட இத்தனை மக்கள் வருவார்களா என்று சந்தேகம் வரும். அப்படிப் பட்ட காலத்தில்கடற்கரை திருமணத்தை வாழ்த்த பத்தாயிரம் பேர்கள்.

ஆம்....!

மணமக்களை இருபதிணாயிரம் கரங்கள் மலர் தூவி வாழ்த்தின.

அவர்களுக்கு மேலும் அண்ணல் மகாத்மா தனது பொற்கரங்களால் மணமக்களை வாழ்த்திக்கொண்டே இருந்தார்.